மூ—தொழுமின்றூயமனத்தராயிறையுநில்லா துயரங்களே* ॥எ॥
துயரமேதருதுன்பவின்பவினைகளாயவையல்லனாய்* யுயர்நி
ன்றதோர்சோதியாயுலகேழுமுண்டுமிழ்ந்தான்றன்னை* யபர
.................................................................

ஆ—தொழ உங்களுடைய ஸம்ஸாரது:க்கங்களும்போமென்கிறார். ॥
(துயரமேதரு) ஸ்வாபிமதவர்ணாவஸரத்வேஷனாய், அ
கர்மவச்யனாய், நிரவதிக தேஜோவிசிஷ்டனாய், ஸகலலோக
ரக்ஷகனாய், ஸ்வாச்ரிதஜநங்களை யநேகம்காரர் அபாயமாதபடி யவர்
களை ரக்ஷித்தருளும் ஸ்வபாவனாய், அவர்களோடே ஸ்நேஹமாக ஸம்
ச்லேஷிக்கும் ஸ்வபாவனுமிருந்த தயரதற்கு மகன்றன்னையன்றி ம
.................................................................

இ—ன்கிறதை விவரிக்கிறார் (உங்களுடையவித்யாதியால்) ॥எ॥

✳எட்டாம்பாட்டு.✳

துன்பவின்பவினைகளாயென்கிற ஸர்வேச்வரத்வத்துக்குத்
தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்வாபிமதாதியால்) அவையல்ல
னென்கிறதை யுரைக்கிறார் (அகர்மவச்யனென்று) அபரவா
ங்கு நமன்றமர்க்கருநஞ்சினை யென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்
செய்கிறார் (ஸ்வாச்ரிதாதியால்) அச்சுதன்றன்னை யென்கிறத
ற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களோடித்யாதியால்)
.................................................................

ஸ—ஸாத்விகநராய், உதக்ரஸம்ஸாரஹிதநராயென்
றபடி. தொழுமின் - தொழுங்கோள், துயரங்கள் - து:க்கங்கள்,
இறையும் - லேசத்தும், நில்லா - நசித்துவிடும். * ॥எ
துயரமேதரு - து:க்கைகதாநமான ஸம்ஸாரங்களான, துன்பவின்ப
வினைகளாய் - து:க்கஸாதநகர்மங்களாய், ஸர்வேச்வர
னாகளாயென்றபடி. துன்பம்-து:க்கம், இன்பம்- ஸுகம், வினை-
கர்மம், ஸர்வரும் து:க்கோபகர்மாதிகளாலே து:க்கைக
ராயிருப்பர். அவையல்லனாய் - அந்த ஸர்வேச்வரஹிதனாய்,
உயர்நின்றது - ஸர்வோத்க்ருஷ்டமாயிருந்த, ஓர்சோதியாய் - விலக்ஷணஜ்யோதிஸ்ஸாய், ஸாக்ஷாத்விக்ரஹ தேஜோவிசிஷ்டனாய்
என்றபடி. உலகேழுமுண்டுமிழ்ந்தான்றன்னை - லோகஸப்தகங்களை
யுமுண்டுமிழ்ந்தவனையென்றபடி. அபர-ரோஷிக்கும்படி, வெதநர்
த்வேஷிக்கும்படி. வாங்கு-ஸ்வாநநனவர்க்குமவனான, தத்ஸ்தாந

மூ—வரங்குநமன்றமர்க்கருநஞ்சினையச்சுதன்றன்னைத்* தயரதற்கு மகன்றன்னையன்றிமற்றிலேன்றஞ்சமாகவே* ||அ||

ஆ—ற்றிலேன்றஞ்சமாக நீங்களுமாஸ்ரயிங்கோளென்கிறார். ||அ||
(தஞ்சமாகிய) எம்பெருமான் திருவவதாரம்பண்ணி ஸம்ஸாரிகளைப் ரக்ஷித்தருளுகிற க்ருத்தி ஞாதவப்பெற்றிலோம் ஸ்ரீ வைகுண்டத்திலே யெழுந்தருளியிருக்குமிருப்பு நமக்குவொருவா மன்று, ஆனபின்பு இங்ஙனே யவனை யாஸ்ரயிக்குமடியென்னில்;

இ—பாட்டுக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நீங்களும் த்ராவிடியால்) ஸஹஸ்ரவேதவசஸாம் கீழே ராமக்ருஷ்ண ந்ருஸிம்ஹாத்யவதாரங்களைச் சொல்லிவைத்தில்தான் தஞ்சமாகப்பற்றினது ராமாவதாரமென்று ஸவிஸ்வாஸத்தைச் சொல்லுகிறாரென்று திருவுள்ளம். இத்தாலே ஸம்மதியுமாய்த்து. இப்படியே பூர்வாசார்யர்களெல்லாரும் சில வேதிஹ்யங்களும் சொல்லிக்கொண்டு நிர்வஹித்தார்கள். * * * ||அ||

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

ராமாவதாரமே ஸமாஸ்ரயணீயமென்று நிர்த்தாரணம்பண்ணி யநந்தரமே நெஞ்சினால்நினைப்பான் யவனவனாகுமென்று நெஞ்சாலே நினைத்த ரூபமெல்லா மாஸ்ரயணீயமென்கை விரோதமன்றோவென்ன ஸமர்ப்பிக்கிறார் (எம்பெருமானி த்ராவிடியால்) ப்ரத்யக்ஷித்தாலல்லது ஸமாஸ்ரயணம் ஸாதனமன்றென்று பாவாபிப்ராயம். ஆழ்வாரைப்போலே யெங்களுக்கு யோமஸக்தியுமில்லையேயென்று காட்டிக்கொள்ளுகை. அவதரித்த காலத்தில் ஞாதவப்பெற்றிலோமென்று சோகிப்பார்க்குச் சொல்லுகிறாரென்றதாய்த்து. ஆனால் மநுஷ்யபோஜநாதன விவர்களைக்குறித்து நினைத்ததெல்லா மாஸ்ரயணீயமென்னக்கூடுமோ? ப்ரதிவா

ப—வஸாரிகளானவென்றபடி. நமன்றமர்க்கு - யமபடர்க்கும், நமன் - யமன், தமர் - ஸ்ருத்யர், அருநஞ்சினை - ஆஜந்மவிஷமான, யமபடநிரா ஸகனானவென்றபடி. அச்சுதன்றன்னை - அச்யுதனை, தயரதற்குமகன்றன்னையன்றி - தசரதனுக்கு புத்ரனானவனைத்தவிர, மற்று - அந்யத்தை, தஞ்சமாகவிலேன் - ஸரணமாகவுடையேனல்லேன். * * * ||அ||

மூ— கடவியபெருமான்கனைகழல் காண்பதென்றுகொல்
கண்களே* ॥ம॥

கண்கள்காண்டற்கரியனைக் கருத்துக்குநன்றுமெளியனை*

ஆ— னுக்காக ஸாரத்யவ்ருத்தி பண்ணியிருந்த எம்பெருமானுடைய திருவடிகளையன்றோ? என்னுடைய கரணங்கள்காண்பதென்கிறார். * * * * * ॥ம॥

(கண்கள்) அயர்வறுமமரர்களுக்கருள் செய்யுமாப்போலே

இ—வியவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸாரத்ய ஐத்யாதியால்) கண்களென்றது உபலக்ஷணமென்கிறார் (கரணங்களென்று) இனிமேல் முடியானிலே ஸர்வகரணங்களும் முக்கணிக்கிறவென்று ஆழ்வார் தாமே விவரிக்கையாலே இது உபலக்ஷணமாகவேணுமென்று கருத்து. காண்பது - அநுபவிப்பது, ப்ரத்யக்ஷமான ஸௌலப்யகாஷ்டாவஸரம் நிவ்ருத்தமாய்க்கைபொழிந்தவாறே பரவி வானவரென்கிறபாட்டிலே ப்ரஸித்தமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை ஸ்மரித்து அவன் திருவடிகளை அநுபவிக்க வாசைப்படுகிறாரென்று ஸங்கதியருளிச்செய்தது. ராமஜநநத்தை ஸவிஷாதமாகக் கீழேசொல்லி இங்கே க்ருஷ்ணனை யாசைப்படுகைகூடுமோ? வென்னில்; ஐக்ஷ்வாகவம்ஶ்யரை க்ஷத்ரியஸாமாந்யாதிகளிலே ப்ரேரிக்கை யோக்யமல்லாமையாலே பெருமாளுடைய ஸௌஶீல்யஸௌலப்யங்களும் ஸர்வ நவரியாஹத்தைப் பெறமாட்டாதே கிடந்தாப்போலன்றிக்கே க்ஷத்ரியஸாமாந்யாதிகள் செய்யப்பெற்றவதத்தாலே க்ருஷ்ணனை யாசைப்படுகிறாரென்பார்கள். ॥ம॥

*நிகமனம்.*

வானவரீசனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(ஆயர்

ப— யவிஷேஷத்தை யநுபவிக்கப்பிறந்த ஸாத்யஸம்ருதிகளுடைய காலத்திலே, தேர்கடவியபெருமான் - அர்ஜுநரதத்தை நடத்தின ஸாரதியுடைய, கனைகழல்-த்வநிக்கிற ஆபரணங்களை, வீரகடகத்தாலே த்வநிக்கிறவென்றபடி. கண்கள் - நேத்ரங்கள், என்றுகொல்காண்பது - ஸேவிப்பது, ॥ம॥

கருத்துக்கு- நெஞ்சுக்கு, நன்றும்- ஸம்யக்காக, எளியனை -

மூ— பயிலுஞ்சுடரொளிமூர்த்தியைப்பங்கயக்கண்ணனைப்*
பயிலவினியநம்பாற்கடற்சேர்ந்த பரமனைப்* பயிலுந்திருவுடை
யார்யவரேலுமவர்கண்டீர்* பயிலும்பிறப்பிடைதோறெம்

அ— பிராட்டியுடைய ஜந்மஸ்தாநமாகையாலே திருப்பாற்கடலைத் தனக்கு ப்ரியமான வாஸஸ்தாநமாக வுடையனாய் ஸர்வலோகநாதனையும் ஸர்வஶேஷவிக்ரஹஸ்தனாய், நிரதிஶயதீப்தியுக்தனாய், திவ்யரூபனாய் பங்கயக்கண்ணனுமிருந்த வெம்பெருமானுடைய ஜ்ஞாநஸம்பத்ஸம்ருத்திகாரிதஹர்ஷவஸ்ஸ்வத்தை யுடையார் ஆரேனுமாகிலும் அவர்கிடீர்நமக்கு ஸ்வாமிகள்என்கிறார். ௧௪

இ—. இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹமென்றதாயிற்று. *

* முதற்பாட்டு *

ஸௌலப்யத்திலே ஈடுபட்டுப்பேசுகிறாரென்னுமிடம் தோற்றுகைக்காக ஆஶ்ரயம் பாற்கடற்சேர்ந்த என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டியித்யாதியால்) பயிலவினியமென்கிறதை விவரிக்கிறார் (ஸர்வேத்யாதியால்) பயிலுஞ்சுடர் என்கிறதையுரைக்கிறார் (நிரதிஶயேத்யாதியால்) ஒளிமூர்த்தியென்கிறதையுரைக்கிறார் (திவ்யேத்யாதியால்) பயிலுந்திருவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஜ்ஞாநேத்யாதியால்) எம்மையித்யாதிக்கு நிஷ்கர்ஷமருளிச்செய்கிறார் (நமக்கித்யாதியால்)௧

ஶ— பயிலும்சுடர்- ஸஞ்சாரதீப்திகனை, பயிலுகை-ஸஞ்சிக்கை, ஒளிமூர்த்தியை-திவ்யதேஜோவிக்ரஹனான, ஶோபாஸஹவிக்ரஹனான என்றபடி. பங்கயக்கண்ணனை - பங்கயக்கண்ணனை, பயில - ஸஞ்சிக்க. ஸம்யோகம்யவிஷயம் பண்ணப்பண்ணவென்றபடி, இனிய - போக்யனை. நம்- ஸ்வாமியனை, பாற்கடற்சேர்ந்த - க்ஷீரார்ணவஶாயினை, பரமனை, பயிலும்திருவுடையார்- ஸம்யக்ஸேவிக்கையாகிற ஸ்ரீயையுடையார்,யவரேலும் - ஆராகிலும், ஜந்மவ்ருத்தாதிகளால் நிக்ருஷ்டரானாலுமென்றபடி. அவர்கண்டீர், விஶேஷாம்ஶப்ரவர்த்தநார்த்தம் கண்டீரென்றது. பயிலும்பிறப்பிடைதோறு - உத்தரோத்தரம் ஸஞ்சரஜ்ஜந்மகாலந்தோறும். ஸாமாந்யஶேஷகம் ஸஹிக்குமாகில் மோக்ஷத்திற்காட்டில் ஜந்மாந்தரமேயே உத்தேஶ்யமென்றுகருத்து, எம்மையாளும்,

மூ—தாளுந்தடக்கையுங்கூப்பிப்பணியுமவர்கண்டீர்* நாளும்
பிறப்பிடைதோறெம்மையாளுடைநாதரே* ॥௨॥
நாதனைஞாலமும்வானமுமேத்துநறுந்துழாய்ப்* போதனை
பொன்னெடுஞ்சக்கரத்தெந்தைபிரான்றன்னைப்* பாதம்ப
ணியவல்லாரைப்

ஆ—நமக்கென்றைக்கும் ஸ்வாமிகளென்கிறார். ॥௨॥
(நாதனை)ஸர்வஸ்வாமியாய் தேவதாந்தராஶ்ரிதருடைய உத்கர்ஷாபகர்ஷம்பாராதே அவர்களெல்லார்க்கு மோக்ஷந்தன்னைக்கொடுத்தருளும் ஸ்வபாவனைப் திருவாழியாழ்வானாலே ஸ்லாக்யதையுமிருந்த எம்பெருமானைப்பாதம்பணிய வல்லாரைப்

இ—(என்றைக்குமென்று) ஆளுடைநாதரென்கிறதையுரைக்கிறார் (ஸ்வாமிகளென்று) * * * ॥௨॥

* மூன்றும்பாட்டு. *

ஞாலமும்வானமுமேத்தும் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தேவதாந்த்ராதியால்) ஞாலஸ்தரும் மனுஷ்யர்க்கும் வானஸ்தரும் ஆகாஸவாஸிகளுக்கும் உபலக்ஷணமென்றுகருத்து. இத்தாலே தாரதம்யம்பாராத ஸௌலப்யாதிஶயத்திலே ஈடுபட்டுப்பேசுகிறாரென்று ஸாமர்த்யஸித்திகை. பொன்னெடுஞ்சக்கரத்தென்கிறதையுரைக்கிறார் (திருவாழியித்யாதியால்) ॥௩॥

ஸ—தாளும்-கால்களையும், தடக்கையும்-பெருத்தகைகளையும், க்ஷணஸௌஹார்த்தாதிலக்ஷணங்களான வாஹாக்களையுமென்றபடி. கூப்பி பணியுமவர்கண்டீர் - ப்ரணாமம்பண்ணுகிறவர்களே, பிறப்பிடைதோறு - ஜந்மம், நாளும்-தத்ராவஸ்தைதோறும், எம்மையாளுடை - எம்மை தாஸராகவுடையரான, நாதர்-நாயகர். ॥
நாதனை, ஞாலமும் - ஸ்ருஷ்டியும்; வானமும் - ஆகாஸமும், ஏத்தும் - ஸ்தோத்ரம்பண்ணும்படி நின்றவனை, நறுந்துழாய்ப்போதனை - பரிமளிக்கிற திருத்துழாய்வாஸனையுடையவனை, போது - புஷ்பம், போதுடையவன்போதன். பொன்னெடுஞ்சக்கரத்து - ஸ்பர்ஶவிஶேஷமுடைய ஸ்வாமியானவனென்றபடி. எந்தை - நமக்கு ஸ்வாமியான, பிரான்தன்னை - உபகாரகனை, பாதம்பணியவல்லாரை - ஸ்ரீபாதத்தை ப்ரணாமம்பண்ணவல்லவர்களை, வல்லாரை

மூ- நடையாவுடைத்திருநாரணன்றொண்டர்தொண்டர்கண்டீ*
ரிடையார்பிறப்பிடைதோறெமக்கெம்பெருமக்களே* ॥௪॥
பெருமக்களுள்ளவர்தம்பெருமானையமரர்கட்* கருமையொ
ழியவன்றாரமுதூட்டியவப்பனைப்* பெருமைபிதற்றவல்லாரை

ஆ—எம்பெருமானுடைய வழகுக்குத்தோற்றடிமையாயிருப்பார்க் கடிமையாயிருப்பார்கிடீர் இடையார் பிறப்பிடைதோறெமக் கெம்பெருமக்களென்கிறார். * * ॥௪॥

(பெருமக்கள்) ப்ரஹ்மாதி ஸகலதேவர்களுக்குமீஶ்வ ரனாய், ஸ்ருஷ்ட்யாதிகளாலே யவர்களுக்கு ரக்ஷகனுமிருந்தவ னுடைய விப்பெருமையைப்பிதற்றவல்லாரைப்பிதற்றுமவர்கண்டீர்

இ—த்யாதியால்) திருநாரணன் தொண்டரென்கிறதற்குத் தாத்ப ர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானுடையவித்யாதியால்) ॥௪॥

✳ஐந்தாம்பாட்டு.✳

பெருமக்களுள்ளவர் தம்பெருமானென்கிறதை யுரைக்கிறார் (ப்ரஹ்மாத்யாதியால்) அமரர்கட்கு இத்யாதிக்குத் தாத்பர்யமருளி ச்செய்கிறார் (ஸ்ருஜேத இத்யாதியால்) வருமையும்மையுமென்கிறதை

ப்ரீ—கல்யாணங்களை, நடையா- ஸ்வபாவமாக, கைங்கர்யமன் றிக்கேயென்றபடி. உடை-உடையவனான, திருநாரணன் தொண்டர் தொண்டர் கண்டீர் - ஸ்ரீநாராயணனுடைய தாஸதாஸர் கிடீர்; இடையார் - தேவாவகாஶவ்யூஹங்களான், மிரதரங்களானவென் றபடி. பிறப்பிடைதோறு - ஜந்மாவகாஶங்கள்தோறும் - எமக்கு - நமக்கு, எம்பெருமக்கள் - ஸ்வஸ்வாமிசேஷிகள், ஸ்வாமியாரண் மாமிசேஷிகளென்றபடி. * * * ॥௪॥

பெருமக்கள் - மஹாந்கள், உள்ளவர் - விஷ்யமாநர், மஹா ன்களாக்வுள்ள ஸர்வர்க்குமென்றபடி. தம்பெருமானை - ஸர்வ ேஶ்வரனை, அமரர்கட்க்கு அருமையொழிய - ஸமுத்ர மதநத்திலே வ்யாஸம் ஜநிபாசபடி, அன்று - ஸமுத்ரமதநவே ளையிலே, ஆரமுது - ஸ்ரேஷ்டமானவம்ருதத்தை, ஊட்டிய வப்பனை - போஜிப்பித்த ரக்ஷகனை, ஆஸ்ரிதபோஷகஸ்வபாவனான ஸ்ரீஸ்வாமிநதீயா. பெருமைபிதற்றவல்லாரை - மாஹாத்ம்யத்தை ப்ரீதிப்ரயத்தாலே சக்ரமாக்ஷோதிக்க வல்லவர்களை,

ரு—ப்பிதற்றுமவர்கண்டீர்* வருமையுமிம்மையுநம்மையளிக்கும்பிராக்களே* ॥ ௫ ॥

அளிக்கும்பரமனைக்கண்ணனை யாழிப்பிரான்றன்னைத்* துளிக்குநறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்றன்னை* யொளிக்கொண்ட சோதியை யுள்ளத்துக் கொள்ளுமவர்

ஆ—ஸர்வேச்வரனே நமக்கு ரக்ஷகரென்ன ஸாதிகளென்கிறார். ॥ ௫ ॥

(அளிக்கும்) தேவகீநந்தநாய் த்ரிவிக்ரமாவதீர்ணனாய், ஸர்வஜகத்ரக்ஷகனாய், ஸுதர்சநாதிதிவ்யாயுதனாய், திவ்யாபரணஸம்பந்நனாய், ஸௌந்தர்யநிதியாய், நிரதிசய தேஜோவிசிஷ்டனாயிருந்த வெம்பெருமானை யுள்ளத்துக்கொள்ளு

இ—ஸங்க்ரஹிக்கிறார் (ஸர்வேச்வரனுமென்று) ॥ ௫ ॥

✳ ஆறுப்பாட்டு. ✳

கண்ணனையென்றது தேவகீநந்தநாவதாரத்துக்கு ஸ்வலக்ஷணமென்கிறார் (ஷஷ்டதாதியால்) அளிக்கும்பரமனையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸர்வேசதாதியால்) ரக்ஷகத்வேநவாரஸ்யம் விவக்ஷிதமென்றுகருத்து. ஆழிப்பிரான் தன்னையென்றது ஸ்வலக்ஷணமென்கிறார் (ஸம்ஸேவ தாதியால்) துளிக்குநறுங்கண்ணியென்கிறதை விவரிக்கிறார்- (திவ்யதாதியால்) தூமணிவண்ணனென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யதாதியால்) ஒளிக்கொண்டசோதி யென்கிறதை யுரைக்கிறார் (நிரதிசயதாதியால்) சலிப்பின்றியென்கிறதை

பி-பிதற்றுமவர்கண்டீர்-ஸ்பஷ்டம், வருமையும்-பாவிதேஹத்திலும், இம்மையும் - வர்த்தமாநதேஹத்திலும், உஹாபோத்ரவென்றபடி. நம்மையளிக்கும் பிராக்கள்- நம்மைரக்ஷிக்குமுபகாரகர். ॥ ௫ ॥

கண்ணனை - க்ருஷ்ணனை, அளிக்கும்பரமனை - ரக்ஷிக்கும் ஸர்வோத்தமனை. ஆழிப்பிரான்தன்னை - ஸ்பஷ்டம், துளிக்கும் - தேனொழுகிற, நறுங்கண்ணி - ஸௌரப்யத்தை யுடையவனை, தூமணிவண்ணனை - பரிசுத்தநீலரத்னம்போன்றவனை, ஒளிக்கொண்டசோதியை - ப்ரகாசமான தேஜஸ்ஸையுடையவனை; எம்மான்தன்னை; ஸ்வஸ்வாமியை, உள்ளத்து-மனஸ்ஸிலே, கொள்ளு

ரூ—கண்டீர்* சலிப்பின்றியாண்டெம்மைச்சன்மசன்மாந்தரங்

காப்பரே* ‖ ௬ ‖

சன்மசன்மாந்தரங்காத்தடியார்களைக்கொண்டுபோய்த்* தன்

மைபெறுத்தித்தன்றாளிணைக்கீழ்க்கொள்ளு மப்பன்(ஊ)த்*

தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர்*

ஆ—மவர்கண்டீர் ஒருவஸநமில்லாதபடி யாண்டெம்மை ஜந்ம ஜ ந்மாந்தரங்காப்பரென்கிறார். * * ‖ ௬ ‖

(சன்மசன்மாந்தரம்) ஜந்மங்கடோறு மிந்தலோகத்திலே தா னும்வந்துபிறந்தருளி ஆஸ்ரிதரை ரக்ஷித்து, பின்னையவர்களைக்கொ ண்டுபோய் கைங்கர்ய நிரதராக்கித் தன்தாளிணைக்கீழ்க்கொள் ளுமப்பனுடைய விலக்ஷணமான குணத்தைப்பிதற்றவல்லா

இ—புரைக்கிறார் (ஒருவிதாயால்) * * ‖ ௬ ‖

✳ ஏழாம்பாட்டு ✳

சன்மசன்மாந்தரங்காத்தென்கிறதை விவரிக்கிறார் (ரக்ஷித்து ஜந்மேஷு) ஜந்மங்கள்தோறுமென்றது - ப்ராயிகாபிப்ராயம், ரக்ஷித்து என்றது - பாஞ்சதிக ஸம்ஸ்ருதிதாபார்த்தநாதீச வேத ஸமாஸ்ரய ப்ராப்யாதிகளைப்பண்ணியென்றபடி. தன்மை பெறுத்தி யென்கிறதையுரைக்கிறார் (கைங்கர்யமேதத்ரதியால்) தொன்மையென்கிறதை யுரைக்கிறார் (ஸ்வாபாவிகேதத்ரதியால்)

ஶ—மவர்கண்டீர் - ப்ராதிக்கும்ஜநங்கள், கிடீர் சலிப்பின்றி-ப்ர யோஜநாந்தரஸக்தியாலே நமக்குவ்யஸநம்வாராதபடி, ஆண்டு - ப்ரஸாதித்து, சன்மசன்மந்தரம்- இந்தஜந்மத்திலும் ஜந்மாந்த த்திலும், காப்பர், ரக்ஷிப்பார். ‖ ௬ ‖

சன்மசன்மாந்தரம். ஜந்மங்கள் தோறும், காத்து - ரக்ஷித்து அடியார்களை- தாஸரை, கொண்டுபோய் - "நயாமிபரமாங்கதிம்" மென்கிறபடியே அர்ச்சிராதிகமார்க்கத்தாலே தான் கூட்டிக்கொண்டு போய் ஸ்ரீவைகுண்டத்திலே கொண்டுபோய், தன்மை - ஸ்வ ஸ்வபாவத்தை, ஸ்வரூபானுரூபகைங்கர்யங்களையென்றபடி. பெறுத்தி - ப்ராப விந்து, தன்தாளிணைக்கீழ் - ஸ்வபாதாரவிந்தயுகளத்திலே, கொள் ளுமப்பனை ஸ்வீகரிக்கும் ஸ்வாமியையுடைய, தொன்மை -ஸ்வாபா விககுணங்களை, பிதற்றவல்லாரை - சங்கீர்த்தநம்பண்ணுமவ ர்களை, பிதற்றுமவர்கண்டீர் - சங்கீர்த்தநம்பண்ணுமவர்கண்டீர்,

மூ—நன்மைபெறுத்தெம்மைநாளுய்யக்கொள்கின்றநம்பரே*எ॥
நம்பனைஞாலம்படைத்தவனைத்திருமார்பனை* யும்பருலகினி
ல்யார்க்குமுணர்வரியான்றன்னைக்* கும்பிநாகர்களேத்துவ

---

ஆ—ரைப்பிதற்றுமவர் சண்டர் ஸ்வசேஷ்டைதகாலதிகாரவை ஷம்யத்தைநமக்குத்தந்து அத்தை நித்யஸித்தமாக்குவரென்கிறார்.॥
(நம்பனை) ஸர்வஸ்வாமியாய், ஜகத்ஸ்ரஷ்டாவாய், ஸ்ரீயःபதி யாய், ப்ரஹ்மாதிகளுக்கும் வாங்மனஸாபரிச்சேத்யனாயிருந்த வனை யநந்யப்ரயோஜநராய்க் கொண்டேத்துவார் சாஸ்த்ரீயநாக யாதநா ஸ்வாநாம ஸ்வபாவங்களைப்பண்ணினாரே யாகிலும்

---

இ—நன்மைபெறுத்தென்கிறதை விவரிக்கிறார் (ஸ்வஸேஷத்வா தியால்) நாளித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அத்தையி த்யாதியால்) * * * * * ॥எ॥

✱ எட்டாம்பாட்டு. ✱

நம்பனையென்கிறதற்கு ஹேதுவருளிச்செய்கிறார் (ஸர்வ ஸ்வத்யாதியால்) திருமார்பனையென்கிறதற்குத் தாத்பர்யமருளி ச்செய்கிறார் (ஸ்ரீயःபதியாயென்று) த்விதீயபாதத்துக்குத் தாத் பர்யமருளிச்செய்கிறார் (ப்ரஹ்மாதியால்) ஏத்துவரென்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அநந்யேத்யாதியால்) கும் பிநாகர்களேலு மென்றநுவதித்துத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (சாஸ்த்ரீயாதியால்) * * ॥அ॥

---

மூ—நன்மைபெறுத்து-ஸ்ரேயஸ்ஸை ஸம்பாதித்து, நாள் - நித்யம் எம்மை- நம்மை, உய்யக்கொள்கின்ற- உஜ்ஜீவிப்பியாநின்ற, நம்பர்- விஸ்வஸநீயர், ॥எ॥

நம்பனை - விஸ்வஸநீயனை, ஞாலம்படைத்தவனை - ஜகத்தை ஸ்ருஷ்டித்தவனை, திருமார்பனை - ஸ்ரீவக்ஷஸ்ஸனை, உம்பருலகி னில் - உபரிலோகங்களில், ஸத்யலோகாதிகளிலென்றபடி. யா ர்க்கும் - எத்தனையேனு முத்க்ருஷ்டரானார்க்கும், உணர்வரியான் தன்னை - ஜ்ஞாநகோசரனல்லாதவனானவனை, ஏத்துவர் - ஸ்துதி ப்பார், கும்பிநாகர்களேலும் - சாஸ்த்ரீயாகநாகவான்களானாலும், தத்வஜ்ஞாநவான்களானாலுமென்றபடி.

மூ— ரேனும்வர்கண்டீர்* ரெம்பல்பிறப்பிடைதோறெந்தொழு
குலந்தாங்களே* ॥அ॥
குலந்தாங்குசாதிகணாலிலுங்கீழிழிந்தெத்தனை* நலந்தானி
லாதசண்டாளசண்டாளர்களாகிலும்* வலந்தாங்குசக்கர
த்தண்ணன்மணிவண்ணற்காளென்றுள்* கலந்தா ரடியார்

ஆ—அவர் கண்டீ ரெம்பல்பிறப்பிடைதோறெந் தொழுகுலந்தாங்க
ளென்கிறார். * * * * * ॥அ॥

(குலம்) வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்கு அ
டிமைசெய்யுமிதுவே ஸ்வரூபப்ரயோஜநமாக வாஶ்ரயிப்பார், ஜாத்யாதி
ராதிகளாலெத்தனையேனுந் தண்ணியரேயாகிலும் அவரடியார்

✳ஒன்பதாம்பாட்டு.✳

இ— ஆளென்றுள்கலந்தாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்
கிறார் (அடிமையித்யாதியால்) வ ர்ணாச்ரமத்துக்குத் தாத்பர்
யமருளிச்செய்கிறார் (ஜாதீத்யாதியால்) ஸ்வாபாவத்தாலே நல
மென்றது வ்யாவ்ருத்தம். எம்மடிகளென்கிறதை யுரைக்கிறார்

ப—அவர்தாங்கள்கண்டீர்,எம்பல்பிறப்பிடைதோறும் நம்முடைய
பஹுவிதஜந்மாவகாஶந்தோறும், எந்தொழுகுலம் - நமக்கு
சேஷ்யமானகோஷ்டம். ॥அ॥

வலந்தாங்கு -தக்ஷிணபாகத்திலேயதிக்கிற, தக்ஷிணகரத்தா
லே யதிக்கப்பட்டவென்றபடி. தக்ஷிணபாகத்துக்கெல்லாம் ஸௌ
ஸாவஹமென்கைக்காக வலமென்றுஸாமாந்யப்ரயோகம். சக்கரத்து-
சக்ரத்தையுடையவனாை, அண்ணல் மணிவண்ணற்கு- ஸ்வஷ்டம்.
ஆளென்று- தாஸரென்றநுஸந்தித்து, உள்கலந்தார்- க்ருதஸம
ஸ்ரிஷ்டரான கநந்யப்ரயோஜநரெவ ஸம்ஸ்ருஷ்டரானவென்றபடி,
அடியார் - தாஸர், குலந்தாங்கு -கோஷ்டங்களை யதிப்பதான,
காணொவுப்ரதிபொதவிஷயத்தாலே ஸம்ஸவிக்கும் கோஷ்டங்களு
க்காதாரமானவென்றபடி. ப்ரயோஜநமானவென்கை. யதார்த்த
ஜ்ஞானமானவென்றபடி. சாதிகள்நாலிலும் - வர்ணாதிஜா
திகள்நாலிற்காட்டிலும், கீழிழிந்து - நிக்ருஷ்டஜாதியிலேயிறங்கி,
அதிலேஜநித்தென்றபடி. எத்தனைநலமில்லாத - க்ருதஸம்பாண
ப்ரதிஷ்டரானசண்டாளசண்டாளர்கள்தாகுகிலும்-ஸம்பாஷணர்க்கும்

மூ—தம்மடியாரெம்மடிகளே* ||௯||

அடியார்ந்தவையமுண்டாலிலையன்னவசஞ்செய்யும்* படியா
துமில்குழவிப்படியெந்தைபிரான்றனக்* கடியாரடியார்தம்
மடியாரடியார்தமக்*கடியா ரடியார்தம்மடியா ரடியோங்களே||

ஆ—நமக்குஸ்வாமிகளென்கிறார். * * ||௯||

(அடியார்ந்த) இந்தலோகத்தை யளந்தருளி யுண்டருளியாலி
லையிலே கண்வளர்ந்தருளின அவனுடைய காருண்யஸௌந்தர்யாதி
குணங்களுக்குத் தோற்றடிமையாயிருப்பா ரடியா ரடியார்தம்மடி
யா ரடியார் தமக்கடிமையா ரடியார் தம்மடியா ரடியோங்களென்கிறார்.

இ—(ஈமச்சித்ராதியால்) * * * ||௯||

*பத்தாம்பாட்டு.*

அடியார்ந்தவையமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கி
றார் (இந்தவித்யாதியால்) அன்னவசஞ்செய்யுமென்கிறதற்குத் தா
த்பர்யமருளிச்செய்கிறார் (கண்ணித்யாதியால்) பிரானென்கிறதற்
குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (காருண்யஸௌந்தர்யத்தாலே) படி
யாதுமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸௌந்தர்யஸௌ
லப்யத்தாலே) இது உபலக்ஷணமென்று கருத்தாலே ஸௌசீல்யம். பி
ரான்தனக்கடியாரென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (தோ
ற்றித்யாதியால்) ஸாமந்தவிஷயத்திலே காஷ்டாப்ராப்ததாஸ்ய

மூ— ஸம்ஸாரிகளாயிருந்தாரேயாகிலும், தம்மடியார் - சேஷ
பூதர், எம்மடிகளே - ஸ்வஸ்வாமிகளே. ||௯||

அடியோங்கள் - தாஸ்யஸ்வபாவரான நாங்கள், அடியார்ந்த -
ஸ்ரீபாதத்துக்களவான, த்ரிவிக்ரமதசையிலே ஸ்ரீபாதாக்ரா
ந்தமான என்றபடி. வையம் - ஜகத்தை, உண்டு - ப்ரளய
தசையிலே ஸம்ஹரித்து, ஆலிலை - வடதளத்திலே, அன்னவசம் -
சயனத்தை, அதாவது சனத்துக்கநுகூலமாய் வசிக்
கை, ஜாக்ரதமான ஜகத்து ஜீர்ணமாகாதபடி வஸிக்கைக்காகக்
கண்வளருகையென்றபடி. செய்யும் - அத்தைப்பண்ணுமவனை,
படியாதுமில் - ஸாத்ருச்யமொன்றுமில்லாத, படி - ஸாத்ருச்யம், குழ
விப்படி - சிசுவிக்ரஹனுடைய, படி - சரீரம், எந்தைபிரான்தன
க்கு - ஸ்வத்வம், அடியாரடியார்தம் - தாஸதாஸருடைய, அடியா

மூ—முடிவாரக்கற்கிற்கிற்சன்மஞ்செய்யாமைமுடியுமே* ॥௧௧॥

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

---

ஆ—த்ருஶம்ஸேவ்ய கல்யாணகுணங்களுக்குத்தோற்றடிமையாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்க ளாரேனுமாகிலுமவர்களுக்கடிமை ஸார்வ்வராவுமென்று சொன்னவித்திருவாய்மொழியை யாரக்கற்கவல்லார்கில் அவர்களுடையஸம்ஸாரஸம்பந்தஸ்ரக்ஷிக்கவிரோதியாகவெல்லாம்போமென்கிறார். ॥௧௧॥

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

---

இ—ரூர்(தோற்றடிமையிலாஷியால்)மேல்முடிவென்கிறதற்குத்தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆரேனுமிலாஷியால்) சன்மமென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அவர்களுடையவிலாஷியால்) செய்யாமைமுடியுமென்கிறதைஸம்ஹரிக்கிறார்(போமென்று)॥௧௧॥

---

ஶ—விஶேஷக்ஷ்வபர்வஸ்யபாகவத்கிவாஶித்ததானவென்றபடி இவைபத்து - இப்பத்துப்பாட்டுகளையும், ஆர - வாறிணமோகக் கற்கிற்கில் - கஸ்ருவிக்கஶக்தர்கில், சன்மம் - ஜந்மமானது, செய்யாமை - செய்யப்படாமல், கர்மங்களாலே புத்ரமித்ர மூண்டாக்கப்படாமலென்றபடி. முடியும் -ஸமாப்தியாம். ॥௧௧॥

ஸ்ரீமதேவராஹ்மாநுஷ்டாநமோஸ்ரீமதேஸாத ராமாநுஜமஹாதேஶிகாயநம:

✻

ஸ்ரீ:

த்ராவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி:

(பயிலுஞ்சுடரொளி.)

ஸ்ரீதாமோதாதிஸம்ருத்த்ரா வ்ருத்தபாஹாபாஹூஜயா திவ்ய
தாருஸ்ராக்ஜா ஸத்வஸ்ராகல்பவத்யா த்ரிதஸபரவஶத்ரா
தாரக்ஷணைகநைவ்யவத்யா । தர்சிதக்ஷராந்திதாம்
வ்யாப்திரயஸ்ராஸயா ஶ்யாமயாநித்யவத்யா ஶௌ
ரே: காந்த்யாஜிதாநாம் ஸ்வஸ்ஸாதஜநஸ்வாதிதாஸ
ம்ஸ்து ॥ ॥௪௦॥

(ஸ்ரீதாமோதாதிஸம்ருத்த்ரா) பயிலுஞ்சுடரொளிமூர்த்தியை விலக்ஷணமாய்ச்செறிந்திருந்த தேஜஸ்ஸையுடையதுமாய், (வ்ருத்தபாஹாபாஹூஜயா) தோளுமோர்நான்குடை - கல்பகஶாகைகள்போலே சுற்றுடைத்தாயிருக்கிற நாலுதிருத்தோள்களையுடையதுமாய், (திவ்யதாருஸ்ராக்ஜா) நறுந்துழாய்ப்போதனைப் பொன்னெடுஞ்சக்கரத்தெந்தை - திவ்யபரிமளமான திருத்துழாய் மாலையையும் தேஜிஷ்டமான திருவாழியையுமுடையதுமாய், (ஸத்வஸ்ராகல்பவத்யா) உடையார்ந்தவாடையணிக்தாதி - திவ்யங்களான திருப்பரியட்டம், திருக்கண்டஸரம், திருவரைநூல்வடம், திருபவித்ராவவீதம், திருவபிஷேகம் முதலான மற்றுமுள்ள திருவாபரணங்களையுடையதுமாய், (த்ரிதஸபரவஶத்ரா) அமரர்க்கருமை யொழியவன்று மாதூட்டியவப்பனை - தேவர்களுக்கு போக்யமான அம்ருதத்தைக்கொடுத்ததுமாய், (ரக்ஷணைகநை வ்யவத்யா) அளிக்கும்பரமனைக்கண்ணனை - ரக்ஷணத்தை ஸ்வபாவமாக உடையதுமாய், (தர்சிதக்ஷராந்திதாம் வ்யாப்த்யா) சன்மசன்மாந்தரங்காத்திருத்தி - ஆஸ்ரிதரை ஸம்ஸாரத்தில்நின்றும் உத்தராக்கி அவர்களாலே செவ்விப்பூப்போலே ஸிரஸ்ஸிலே சூடப்பட்ட திருவடிகளையுடையதுமாய், (ஸ்ரீரயஸ்ராஸயா) திருமார்பனை - அலர்மேல்மங்கையுறையும் அகிலமெல்லாமென்று உறையும் படியான திருமார்பையுடையதுமாய், (ஶ்யாமயா) அண்ணல்மணி வண்ணற்கு - நீலரத்னம்போலே ஸ்யாமமுமாய், (நித்யவத்யா) ஆயிலையன்னவசம்செய்யும்படியாதுமில்குழவி-உருவையகாருத்தி

ஈ — கா—மிடைவிடாதே திவ்யரூபமாயிருக்கிற எம்பெருமான் திருமேனியோலே கைக்குத் தோற்றடிமைசெய்யும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய தாஸதாஸர்கள் எமக்கு ஸ்வாமிகளென்று 'பயிலுஞ்சுடரொளி' என்கிற ப்ரஸங்கத்திலே ஆழ்வார் அத்யவஸித்தருளினாரென்கிறார்.

ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம:.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்தில் ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

# எட்டாந்திருவாய்மொழி.

ஆ— (முடியானே) தேர்கடவியபெருமான் கனைகழல்காண்பதென்றுகொல்கண்கள் என்று பிறந்த வைக்லப்யமானது மீளவும் உத்பந்நையாய் அந்த ஸாக்ஷாத்காரமாகக் காணப்பெறாத

## எட்டாந்திருவாய்மொழி.

இ— "தலைப்பெய்காலம்" என்கிறபாட்டில்படியே திருவேங்கடமுடையான் தமக்கு ப்ரத்யக்ஷஸித்தனாயிருக்க இத்திருவாய்மொழியிலே ஆர்த்தராய்க்கூப்பிடுவானேன்? என்ன ஸங்கதிப்பிக்கிறார் (தேர்கடவியவித்யாதியால்) திருவேங்கடமுடையான் ப்ரத்யக்ஷனாயிருந்தாலும் பாஹ்யஸம்ஶ்லேஷ தர்ஶநாபேக்ஷயா கூப்பிடக்கூடுமென்றுகருத்து. ஆனாலும் தேர்கடவிய என்கிறவிடத்தில் பிறந்த பாஹ்யஸம்ஶ்லேஷ தர்ஶநாபேக்ஷயானது பயிலுஞ்சுடரொளியாலே ஶமித்ததில்லையோ? என்ன அருளிச்செய்கிறார் (மீளவுமித்யாதியால) பயிலுஞ்சுடரொளியில் ஸௌஶீல்யாதிகுணவிஶிஷ்டரான ஸாத்விகரை ஸந்தர்ஶிப்பித்தது ஸாத்விகஸம்ஶ்லேஷாபேக்ஷைக்கு ஶமகமாகையாலே இவ்வைக்லப்யம் இப்போது உத்பந்நமாய்த்தென்று கருத்து, இப்படி பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை இப்போதே உத்பந்நமாய்த்தென்னுமிடம் கீழ்ப்பாட்டிலே அடியோங்குநாற்றுவர் வீயவென்று ஊர்த்வாயநாதி நிரவதிகத்தாலே அறியலாய்த்தென்றுகருத்து. ஆனாலும் யோகத்தாலே காணவிருக்கக்கூப்பிடுவானேன்? என்ன அருளிச்செய்கிறார்(அந்தகவை

ஆ—வ்யஸநத்தாலே அத்யந்தவஸராய்க்கொண்டுதம்முடைய ஸர்வகரணங்களாலும் ஸர்வப்ரகாரத்தாலும் எம்பெருமானை அநுபவிக்கவேணுமென்று சொல்லிக்கொண்டு கூப்பிடுகிறார்.

---

இ—க்ஷுத்த்ருஷ்ணாதியால் பரமத்தாலன்றிக்கே ஸ்ரீஸூக்திகளைப்போலே கேவலவைலக்ஷண்யத்தாலே வாஸுதேவஸாரஸியைக்காண்கை இவர்க்கு அபேக்ஷிதமென்றுகருத்து. அத்யந்தவஸராயென்றது- கண்கள்விடாய்த்தவோதுமன்றியே ஸர்வகரணங்களும் விடாய்த்தவராயென்றபடி. ஸர்வப்ரகாரத்தாலுமென்றது - ப்ரத்யக்ஷாநுபவோத்தாநுபவம் ஸ்மரணஜந்யோத்தாநுபவம் என்கிற நியமமற்று ஒருகரணத்தைக்கொண்டு ஸர்வகரணப்ரகாரத்தாலு மென்றபடி. “ஸூக்ஷ்ம்யக்ஷிவிவாஸக்திஜிஹ்வாவிஹ்வல ப்ரவணவஸ்வாவ்ருத்தி” என்கிறபடியே ஸமஸ்தவிஷயத்திலே தம்முடைய ஒருகரணங்கள்செய்யும் வ்ருத்திகளை இதரகரணங்கள்தாங்களும்செய்ய ஆசைப்படுகிறனவென்று அலத்துகிறாரென்றபடி. ஏழாம்பாட்டுதுடங்கி தான்படுகிற வ்யஸநத்தைச் சொல்லுகிறாரொழிய கரணங்கள்படுகிற வ்யஸநத்தைச்சொல்லவில்லையேயென்னில்? ஊஷிக்ருஷ்ணைய் பஹுப்ரஜனனவன் துர்ப்பிக்ஷகாலத்திலே ப்ரஜைகளுடையபசிக்கும் தன்பசிக்கும் ஆற்றப்படாதே ப்ரஜைகளுடையபசிக்கு என்செய்வேன் என்பசிக்கு என்செய்வேன் என்றுகூப்பிடுமாப்போலே தம்முடைய கரணங்களும் கரணியானதாமும் எம்பெருமானை யாசைப்பட்டு விடாய்த்தோமென்று கூப்பிடுகிறாரென்றுகருத்து. தாமாசைப்படுகையைத்தவிர தம்முடைய கரணங்கள் ஆசைப்படுகையாவதென்னென்னில்; கரணத்வாரகமாகவும் கரணத்வாரமன்றியேயும் ஆசைப்படுகிற தம்முடைய அபிநிவேசங்களைச் சொல்லுகிறபடி. இத்தால் இத்திருவாய்மொழிக்கு ஸர்வேந்த்ரியாகர்ஷகவிக்ரஹவைலக்ஷண்யம் ப்ரதிபாத்யமென்று விவக்ஷிதமாய்த்து. ஆர்த்தியாலே கூப்பிடுகிறதாகையாலே பாட்டுகளுக்கு ப்ரத்யேக ஸங்கதி நிர்ப்பந்தமில்லையென்று ஸூசிதம். * * *

மூ— முடியானேமூவுலகுந்தொழுதேத்துஞ்சீ* ரடியானே
யாழ்கடலைக்கடைந்தாய்புள்ளூர்* கொடியானேகொண்டல்
வண்ணாவண்டத்தும்பரி* னெடியானே

ஆ—ஸர்வலோகாதிபத்ய ஸூசகமாய் நிரதிசயதீப்தியுக்தமாய் ஸகிரீடணீபக்ஷமமாயிருந்த திருவபிஷேகத்தாலே ஸம்ஸாரிகளைப், ப்ரஹ்மாதிகளுக்கு மீஸ்வரனைப்வைத்து ஸநாதிவித விசேஷாசேஷ லோகசரண்யனைப், ஆச்ரித ஜநஸுலபதிவ்யாங்கனைப்பிருந்தவனே பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலேபெரியதிருவடி திருத்தோளின்மேலே ஏறியருளி இந்த லோகத்திலேவந்துதோன்றாய்

✳ முதற்பாட்டு. ✳

இ— முடியானே என்கிறதை விவரிக்கிறார் (ஸர்வேச்வராதியால்) அண்டத்தும்பரில் நெடியானே என்கிறதையுரைக்கிறார் (ப்ரஹ்மாதியால்) மூவுலகும்தொழுதேத்தும் சீரடியானே என்கிற தற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸநாதிவிசேஷாதியால்) ஆழ்கடலைக்கடைந்தாய் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆச்ரிதேத்யாதியால்) கொண்டல்வண்ணா வென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பொன்னித்யாதியால்) கநகாசலசிகரவர்த்தி காளமேகம்போலே யென்றபடி. புள்ளூர் என்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பெரியவித்யாதியால்)

ப—முடியானே- முடியுடையவனே. முடி-கிரீடம், அண்டத்து- ப்ரஹ்மாண்டத்தில், உம்பரில் - அயிகரில், ப்ரஹ்மாதிகளிற்காட்டிலு மென்றபடி. உம்பர் - அயிகர், நெடியானே - உயர்ந்தவனே, மூவுலகும் - த்ரிலோகமும், தொழுது - ப்ரணமித்து, ஏத்தும்- ஸ்துதிக்கும்படியான, சீர் - கல்யாணகுணங்களையுடைய, அடியானே-ஸ்ரீபாதத்தையுடையவனே, ஆழ்கடலை-அகாதமானஸமுத்ரத்தை, கடைந்தாய் - மதித்தவனே, கொண்டல்வண்ணா- மேகவர்ணனே, கொண்டல் - மேகம். புள்ளூர்கொடியானே- பக்ஷியைவாஹநமாகவும் த்வஜமாகவும்உடையவனே, ஊர்தலைக்கு வாஹநமென்கிற வ்யுத்பத்தியாலே ஊர்சப்தம்

மூ— யென்றுகிடக்குமென்னெஞ்சமே* ॥௧॥

நெஞ்சமேநீணகராகவிருந்தவென்* றஞ்சனைதண்ணிலங்கைக்கிறையைச்செற்ற* நஞ்சனைஞாலங்கொள்வான் குறளாகிய*வஞ்சனையென்னுமெப்போதுமென்வாசகமே॥

ஆ— என்றெம்பெருமானைக்காணவாசைப்பட்டபோதே காணப்பெறாமையாலேகுறைப்பட்டுக்கிடக்குமென்னெஞ்சமென்கிறார். ॥௩॥

(நெஞ்சமே) ஆஸ்ரித ஸம்ஸ்லேஷ விரோதிநிரஸந ஸமர்த்தனுமாஸ்ரித ஸம்ஸ்லேஷ நிவர்த்தகநாவாயனுமாயிருக்க நீ நெஞ்சு ன்னைநினைக்கவருள்செய்தாப்போலே நானுமுன்னை நினைக்கவருள் செய்தருளவேணுமென்று எப்போது மலற்றுநிற்கு மென் வாசகமென்கிறார். ॥௨॥

இ— என்றுகிடக்குமென்கிறவிடத்தில் ஸ்வநெஞ்சு தாத்பர்யமருளிச்செய்கிறார் (எம்பெருமானையித்யாதியால்) * ॥௩॥

✳ இரண்டாம்பாட்டு. ✳

தண்ணிலங்கைக்கித்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸ்ரீதேத்யாதியால்) ஞாலமித்யாதிக்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஸம்ஸ்லேஷேத்யாதியால்) ஹ்ருதயஸ்தானத்திற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (நெஞ்சேத்யாதியால்) நெஞ்சமேயென்கிற ஸம்போதநம் வாஜ்மநோநிவ்ருத்தியை ஆசைப்பட்டமையை ஸூசிப்பிக்கிறதென்றுகருத்து. என்னுமென்கிறதையுரைக்கிறார் (அலற்றுநிற்குமென்று) * * * * ॥௨॥

ப— ஸாஹஸவரம். என்று- இப்படி ஸந்தாஸயித்து கிடக்கும்- ஆர்த்தமாய்விழுந்திருக்கும். என்னெஞ்சம்- என்னுடைய மநஸ்ஸானது.॥

என்வாசகம், ஸாவகும், ஸ்தீபவர்த்திர்யமானதென்றபடி. எப்போதும்- ஸதா, தண்ணிலங்கைக்கு- தண்மை- சைத்யம், நீருக்குவாஸஸ்தானமான லங்கைக்கு, இறையை- ராவணனை, செற்ற- ஸம்ஹரித்தவனை, நஞ்சனே- ஸத்ருக்களுக்குவிஷபூதனே, நஞ்சு- விஷம், ஞாலங்கொள்வான்- பூமிம் ஜிவ்ருக்ஷுவாய்க்கொண்டு, குறளாகியவஞ்சனே- வாமநனான வஞ்சகனே, நெஞ்சமேநீணகராகவிருந்த- மநஸ்ஸொன்றுமே நீண்ட நகரமாகவஸியாநின்ற, என்தஞ்சனே- ரக்ஷகனே, என்னும்.

மூ—வாசகமேயேத்தவருள்செய்யும்வானவர்தம்* நாயகனை
நாளிளந்திங்களைக்கோள்விடுத்து* வேயகம்பால்வெண்ணெய்
தொடுவுண்டவானுயர்* தாயவனையென்றுதடவுமென்
கைகளே* ॥௧॥

ஆ—(வாசகமே)வானவர்தம்நாயகனைவைத்துவாசகமேயேத்தவ
ருள்செய்தருளினுர்ப்போலேஸஹிதவடிவண்ணஸம்ஸ்கிரணம் போ
லே திருமுத்தினொளிபுறப்படும்படிதிருப்பவளத்தைத்திறந்துவெண்
ணெய்தொடுவுண்ட உன்னுடையவழகை நானுமேத்தும்படியருள்

* மூன்றும்பாட்டு. *

இ— வாசகமேயேத்தவருள்செய்யு மென்கிறதற்குத் தாத்பர்ய
மருளிச்செய்கிறுர் (வாசகமேயித்யாதியால்) இதுக்கு நானுமித்யாதி
யோடே ஸம்பந்தம். நானுமித்யாதியாகவும் வ்யவஹிதமாயிருந்தாலும்
இப்படி ஸந்நிதமாய்க்கொண்டு வாசகமேயேத்தவருள்செய்யு மெ
ன்கிறதுக்கே தாத்பர்யவர்ணனமாகிறது, வாசகமேயென்கிற ஸ
ங்காரம் ஸஹஸ்ரங்கள் வாங்மனஸ்ஸுயவ்ருத்தியை ஆசைப்பட்டமை
ஸூசிப்பிக்கிறதென்றுகருத்து. நாளிளந்திங்களைக்கோள்விடுத்
தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறுர் (ஸஹிதவித்யாதி
யால்) தொடுவுண்டவென்கிற விசேஷணத்துக்குத் தாத்பர்ய

ஏ—இப்படிசொல்லும், நீள்நகராகமென்கிறவிடத்தில் ளகாராக
வரோநகாரோ ணகாவிகாரஶ்ச:. * * *॥௨॥

வேயகம்பால்- வேய் - வேணு, அகம் - க்ருஹம், பால்
ஸ்தநசேஷ்டனம், வெணுமயமான க்ருஹத்திலே, நாள்-
ஸஹிதவனை, நாள் - புதுமை, இளந்திங்களை - பாலசந்த்ரனை,
உபமாவஸ்துவானசந்த்ரனை, நாளிள மென்றதுஸ்வாம்ய விவக்ஷிதம்,
உதயவ்ருத்தியையுடைய சந்த்ரனாகச்சொன்னபடி, கோள்விடுத்து. தேஜஸ்ஸை
ஆவிர்ப்பித்து, திங்களைக்கோள்விடுத்தென்று ஸிக்ஷகம், வெ
ண்ணெய் - வெண்ணெயை, தொடுவுண்ட - களவுத்தாலே ஸ்வீக
ரித்தவனை, ஆனுயர்தானவனே - கோவச்ரேஷ்டனே, வாசகமே
ஏத்த - வாங்மனஸ்ஸுகளாலே ஏத்தும்படி, அருள்செய்யும் - க்ரு
பைபண்ணுமவனை, வானவர்தம்நாயகனை - நித்யஸூரி
நாயகனை, என்று- இப்படி ஸம்போதித்து, என்கைகள்,

மூ—கைகளாலாரத்தொழுதுதொழுதுன்னை* வைகலுமாத்திரை
ப்போதுமோர்வீடின்றிப்*பைகொள்பாம்பேறியுறைபரனை
யுன்னை* மெய்கொள்ளக்காணவிரும்புமென்கண்களே* ௪

ஆ—செய்தருளவேணுமென்றுதவளுமென்கைகளென்கிறார். ௧
(கைகளாலார) பைகொள்பாம்பேறியுரைபரனே யுன்னையொ
ருக்ஷணமாத்ரமுமொழியாமே எப்போதும் கைகளாலேயாரத்தொ
ழுதுமெய்கொள்ளக்காணவிரும்பாநிற்குமென்கண்களென்கிறார். ௨
(கண்களால்) கண்கொண்டவாமனனேறியருள ஸேவாநம்

இ—மருளிச்செய்கிறார் (உன்னுடையஅழகையென்று) தடவுமென்
கிற வித்தாலே ஸஹஸ்ரங்கள் ப்ரஶம்ஸநாதிவ்யாபாரங்கள்ப்ய மாசை
ப்படுகிறனவென்றுகருத்து. * * * ௩

✳ நாலாம்பாட்டு. ✳

மாத்திரைப்போதுமோர்வீடின்றி யென்கிறதையுரைக்கிறார்
(ஒருக்ஷணமாத்ரமிவ்ருத்திடால்) வைகலுமென்கிறதை யுரைக்கிறார்
(எப்போதுமென்று) (கைகளாவிக்ருதி) கண்களானவ் ஸஹஸ்
ரவ்ருத்திகளிரண்டையு மாசைப்படுகிறனவென்றபடி. ௪

✳ ஐந்தாம்பாட்டு. ✳

மகிழ்ந்தென்கிறதை விவரிக்கிறார் (ஸேவாவிக்ருதியால்) ஸ்வ
கீயத்ருதீயவர்ஷங்களாலே ஸம்ருத்தமாய் ப்ரேமவர்ஷத்திலே

ஸ— தடவும்-உன்னைத்தடவாநிற்கும். * ௫

பைகொள் - ஸம்ஸாரியான, க்ஷேமஸம்ஸ்ப்ருஷ்ட
விகஸிதஸம்மானமென்றபடி. பாம்பு - நாகத்தை, ஏறி - ச
யிரோஹ்ய, உறை - ஶயாநமான, பரனே? - ஸர்வேஶ, என்க
ண்கள், மாத்திரைப்போதும் - மாத்ரகாலமும், க்ஷணமுமென்ற
படி. ஓர்வீடு - ஒருவிச்சேதம், இன்றி - இல்லாமல், வைகலும்-
ஸதா, உன்னை - ஸாதிகேஶநதொழுவாருணவுன்னை, கைகளால்-
ஹஸ்தங்களாலே, ஆர - வர்ணமாக, தொழுதுதொழுது - ஸ
ஷ்டம், கண்கள்கைகளால்தொழுகையாவது - அதின்வ்ருத்தியைத்
தான் பண்ணுகை, உன்னை - ஸௌந்தர்யனவுன்னை, மெய்கொள்ள-
ஸத்யமாக, ப்ரத்யக்ஷமாகவென்றபடி. காணவிரும்பும் - காண்
கைக்காசைப்படாநிற்கும். * * * ௬

மூ—செவிகளாலாரநின்கீர்த்திக்கனியென்னுங்* கவிகளேகால ப்பண்டேனுறைப்பத்துற்றுப்* புவியின்மேற்பொன்னெடுஞ் சக்கரத்துன்னையே* யவிவின்றியாதரிக்குமெனதாவியே॥ கூ॥

ஆ—காலப்பண்ணுகிறதேனிலேகலந்தென்செவிகளாலாரத்துற்று, பொன்னெடுஞ்சக்கரத்துன்னை யிந்தலோகத்திலே காணவேணு மென்றவிவின்றியாதரிக்குமெனதாவியென்கிறார். ॥கூ॥

(ஆவியே) என்னுடையபராகமே? என்னுடையஹ்ருதமே?

இ—ச்ரவணாநந்தத்தாலே த்ருதீயபாத த்ருதீயாக்ஷரமிகார யாக்ஷரமாகவேண்டுகையாலேகனிரஸ்போலேக்ஷயாகவிரஸம் பிறப்பட்டாலும் காலப்பண்டேனென்று மாநத்தை ஐஸ்வர்யமாகச் சொன்ன ரஸிகாநந்தத்தாலே பாட்டுகளை வக்ஷமுமாக ரஸிக்கை புவிதமாகையாலிந்த வ்ருத்தாந்தம் யுக்தமென் றுகருத்து. பக்ஷ- பரிவாரமே சுநயமாணுமிப்படி தாத்பர்ய முசொன்னதாகவுமாம். உறைப்ப வென்கிறதற்கு வ்யக்தமாக தாத்பர்யமருளிச்செய்கிறார் (கலந்தென்று) புவியின்மேலென்கிறதற் குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்(இந்தலோகத்திலேயி த்யாதியால்) ச்ரவணனது ப்ராதுர்பாவத்தையாஜ்ஞிக்கிறதென்றபடி. ॥கூ॥

✳ ஏழாம்பாட்டு. ✳

ஆவியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடைய

ஶ—எனதாவி-தீபவசரணமான்று,நின்கீர்த்தி உன்கீர்த்தியினுடை ய, கூதீர்த்திவிஷயங்களான வென்றபடி. கனியென்னும் - வக்ஷமென்னலாம்படியான, கவிஸ்தோத்ரங்களான வென்றபடி. கவிகளே- பாட்டுக்களை, கவி - பாட்டு, காலப்பண் - ச்ராவ்யாதிகாலோசிதராகமாகிற, தேன்- ஐஸ்வர்யமானது, உறைப்ப-உறை க்கும்படி, கவிகளிலே மாஸ்வாத்யமாம்படி செய்துகொண்டென்கை. செவிகளால் - கர்ணங்களாலே, ஆர - வர்ணமாக, துற்று- பூஜித்து, பொன்னெடுஞ்சக்கரத்து - ஸுதர்சநாயுதவிசிஷ்டனான உன்னையே, புவியின்மேல் - ஹ்ருதயின்மேல், ஸ்ரீ லோகத்திலென்றபடி. அவிவின்றி - விச்சேதமில்லாமல், ஆதரிக் கும் - ஆசைப்படாநிற்கும். ॥கூ॥

மூ—ஆவியேயாரமுதேயென்னையாளுடைத்* தூவியம்புள்ளுடையாய்சுடர்நேமியாய்* பாவியேனெஞ்சம்புலம்பப்பலகாலும்* கூவியுங்காணப்பெறேனுனகோலமே* ||எ||

ஆ—உன்னை ஸம்ஶ்லேஷித்து நான் ஸஞ்ஜீவிக்கும்படியிலே நான்முடிவதற்கு முன்னேயிக்ஷணத்திலே வந்தென்னை யடிமைகொள்ளுமவனாக, பெரியதிருவடியை வாஹநமாகவுடையவனே? ஸம்ஶ்லேஷவிரோதியான என்னுடைய வினைகடிகைக்காக வெப்போதுங் கைகழலா நேமியாய் பாவியேன்னெஞ்சம் புலம்பப் பலகாலும் கூவியுங்காணப்பெறுகிறிலேனுன்னழகையென்கிறார். ||எ||

இ—உவித்யாதியால்) ஆரமுதேயென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதியால்) என்னையாளுடையென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்னைஸம்ஶ்லேஷித்தித்யாதியால்) புள்ளுடையாயென்கிறதை விவரிக்கிறார் (பெரியவித்யாதியால்) சுடர்நேமியென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஶ்லேஷ த்யாதியால்) கூவியுமித்யாதி - கீழே ஐஶ்வர்யங்களுடைய வாசையைச்சொன்னார், இங்கே தம்முடைய வாசையைச் சொல்லுகிறாரென்றுகருத்து. ஸ்வேதரங்களான ஐஶ்வர்யங்களுக்காசையுண்டோ? வென்னில்; தம்முடைய ஸ்வரூபமேவிஷயத்வாகாரமென்றுகருத்து. இவ்வர்த்தமித் திருவாய்மொழியினவதாரிகையில் "ஸர்வகரணங்களாலு"மித்யாதிவாக்யத்தாலே ஸூசிதம். ||எ||

ப—ஆவியே - ப்ராணனே? ஆரமுதே - பரிபூர்ணபோக்யமே - என்னையாளுடை - என்னைதாஸனாகவுடையவனே, அம் தூவிப்புள்ளுடையாய் - ஸுந்தரபக்ஷிராஜனையுடையவனே? தூவி-பக்ஷம், அமதாவியென்றுவ்யுத்பத்திஸௌந்தர்யம், சுடர்நேமியாய் - தேஜஸ்விசக்ரமுடையவனே? பாவியேன்நெஞ்சம்-பாபியானவென்னுடைய ஹ்ருதயமானது, புலம்ப - ஶப்திக்க, வ்யாகுலப்பட வென்றபடி. பலகாலும் - ஸர்வகாலத்திலும், கூவியும் - கூக்குரல் பண்ணியும், உனகோலம் - ஸௌந்தர்யத்தை, காணப்பெறேன் - ஸாக்ஷாத்கரிக்கப்பெறுகிறிலேன். * * ||எ||

மூ—கொள்வனன்மாவலிமூவடிதாவென்ற* கள்வனேகஞ்சனை
வஞ்சித்துவாணனை* யுள்வன்மைதீர வோராயிரந்தோடு
ணித்த* புள்வல்லாயுன்னையெஞ்ஞான்றுபொருந்துவனே*॥
பொருந்தியமாமருதினிடைபோயவெம்* பெருந்தகாயுன்

ஆ— காலமாக்குவோம் என்றாலுன்னாலாக்கமுடியாதோவென்கிறார். ॥அ॥

(கொள்வனன்) கோலினைமுடிக்க விரகறிவாரொருவனைப், ஆச்ரிதவிரோதி நிரஸநஸ்வபாவனைப், விரோதி நிரஸநஸ்வபாவனாயிருந்தவுன்னை யெஞ்ஞான்று பொருந்துவனென்கிறார் ॥௯॥

✳ ஒன்பதாம்பாட்டு. ✳

இ— கள்வனே யித்யம்ஶத்துக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (கோலினவித்யாதியால்) கஞ்சனைவஞ்சித்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆச்ரிதேத்யாதியால்) வாணனையித்யாதி வல்லாயித்யம்ஶத்துக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (விரோதீத்யாதியால்) * * * * ॥௯॥

ப—காலமே - காலஶரீரகனே, உன்னையித்யாதிவாக்யம்.* ॥அ॥

மாவலி - மஹாபலியே? ஸம்போதி. நான், மூவடி - த்ரிபதபரிமிதமான ப்ரதேசத்தை, கொள்வன் - ப்ரதிக்ரஹிப்பன், தா - நீ கொடு, என்றகள்வனே - இப்படிசொன்னவஞ்சகனே? கஞ்சனைவஞ்சித்து - கம்ஸனை வதித்து, வாணனை - பாணாஸுரனை, உள்வன்மை - மநஸ்ஸில் தார்ட்யம், ராக்ஷஸர்களுக உடையோமென்கிற அஹங்காரமென்றபடி. தீர - நிவ்ருத்தமாம்படி, ஓராயிரம்தோள் - அத்விதீயஸஹஸ்ர பாஹுக்களை, துணித்த - சேதித்தவனை, புள்வல்லாய் - கருடவாஹனனானவனே, கஸ்ய ஸ்கந்தே:, ரமஸ்ஸ்கந்தே:, என்னுமாப்போலே கருடஸம்ஞாரஸ்கந்தனென்றபடி. உன்னை, எஞ்ஞான்று - எந்த காலத்திலே, பொருந்துவன் - ப்ராப்தமாகவடையக்கடவேன். * ॥௯॥

பொருந்திய - பரஸ்பரஸ்லிஷ்டமான, ஸம்ஸ்லிஷ்டமானவென்றபடி. மாமருதின் - மஹத்தான யமளார்ஜுநவ்ருக்ஷங்களினுடைய, இடை போய - மத்யே போனவனை, எம்பெருந்தகாய்? - ஸௌசீல்யனான விசேஷஸ்வபாவனே, தகை - ஸ்வபாவம். காரணையைச்சொன்னபடி;

மூ—கழல்காணியபேதுற்று* வருந்திநான்வாசகமாலைகொண் டுன்னையே* யிருந்திருந்தெத்தனைகாலம்புலம்புவனே* ௰

ஆ—(பொருந்திய) பொருந்தியமாமருதினிடையகப்படாதேபோ யென்னை ரக்ஷித்தருளின உபகாரசீலனே? உன்திருவடிகளைக் காணவாசைப்பட்டுப்பெறாதொழிவதிப்படி முடியவும்பெறாதேயி ருந்து பெரியவருத்தத்தோடே புன்மாணங்களைச்சொல்லிக்கொ ண்டு நானின்னுமெத்தனைகாலங்கிடந்தலற்றக்கடவேனென்கிறார்.॥

(புலம்புசீர்) எல்லாராலுமேத்தப்படும் குணங்களையுடைய

## ✳ பத்தாம்பாட்டு. ✳

இ— போயவென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (அகப் படாதேபோயென்று) பொருந்தகா யென்கிறதை விவரிக்கிறார் (என்னைரக்ஷித்தி த்யாதியால்) ஸர்வாவிஷ்டனை மருதினருகே க்ருஷ்ணன்போனானென்றவாறே வயிறெரியுமவராகையாலே அவன திலகப்படாதே தப்பிப்போனதையே தமக்கு ரக்ஷணமாகச்சொல்லு கிறாரென்றுகருத்து பேதுற்றென்கிறதற்குத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (ஆசைப்பட்டித்யாதியால்) இருந்திருந்தென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இப்படியித்யாதியால்) வருந்திய ன்கிறதைவிவரிக்கிறார் (பெரியவித்யாதியால்) வாசகமாலைகொண் டென்கிறதற்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (உன்குணங்களை யித்யாதியால்) புலம்புவனே யென்கிறதையுரைக்கிறார் (அலற்றக் கடவேனென்று) * * * * * ॥௰॥

## ✳ நிகமனம். ✳

புலம்புசீரென்கிறதையுரைக்கிறார் (எல்லாராலுமித்யாதியால்)

ப— உன்கழல்காணிய - ஸ்வபாதங்களைக்காணுகைக்காக, பேது - மோஹத்தை, மோஹஜநகமானவ்யாமோஹமென் றபடி, உற்று - அடைந்து, இருந்திருந்து - விரஹமும் ஜீவித்து க்கொண்டு, வருந்தி - க்லேசித்து, நான் - விஷயவைலக்ஷணனல்லா தநான், வாசகமாலைகொண்டு - ஸூக்திஸமூஹங்களாலே யென்ற படி. உன்னையே - நிரதிசய ஸாமஹ்யனானவுன்னையே, உதீசேஷ்ய த்தோஷ:. எத்தனைகாலம், புலம்புவன் - ஆரவிப்பன். ॥௰॥

